உ

ஓம் ஸ்ரீ தந்வந்தரயே நம:

# ஔஷத குணஸங்கிரஹம்



## திருச்சி ஆயுர்வேதிக் யூனியன் பிரைவேட் லிமிடெட்

*ரிஜிஸ்ட்டர்ட்-ஆபீஸ் விற்பனை ஸ்தலம்*
*31/A சின்னக்கடைத் தெரு,*
*திருச்சிராப்பள்ளி-620 002*

ஐந்தாம் பதிப்பு

2005

விலை ரூ. **10/-**

# முன்னுரை

ஔஷத யோக ஸங்கிரஹம் என்ற நூலின் முதற்பாகத்தின் துணைக்குறிப்பு நூலாக இது வெளியாகின்றது. ஔஷத யோக ஸங்கிரஹத்தில் எமது ஸ்தாபனத்தில் தயாராகும் ஔஷதங்களின் செய்முறைக் குறிப்புகள் அடங்கியுள்ளன. அவ்வௌஷதங்களின் உபயோக முறையும் அளவும் அவை எந்நோய்களில் பயன்படுகின்றன என்பதும் பற்றிச் சுருக்கமான குறிப்பு இதில் கொடுக்கப்பட்டுள்ளது.

நோய் நிலையையும் நோயாளியின் தேக மனோ நிலையையும் கால தேசச் சூழ்நிலையையும் கருத்திற் கொண்டு சிகித்ஸை வகுக்க முற்படும் வைத்யன் தமது தேவைக் கேற்ற மருந்துகளை பொறுக்கிக் கொள்ள நேரிடுகிறது. கொடுக்கவிருக்கும் மருந்திலுள்ள கூட்டுப் பொருள்களின் தனிப்பட்ட குணத்தையும் கூட்டுச் சேர்ந்த பின் ஏற்படும் ஸமுதாய குணத்தையும் அவை பயன்படக்கூடிய நோய் நிலையையும் மனதில் பொருத்திப் பார்த்துச் சேர்க்கும் போதுதான் சிகித்ஸையால் நல்ல குணம் கிடைக்கின்றது. அதனால் ஒரே நோக்கமான பல மருந்துகள் இருப்பினும் அவை ஒவ்வொன்றும் நோயின் எல்லா நிலைகளிலும் சமமான பலன் தரவல்லதாக இருப்பதில்லை. தகுந்த குணமுள்ளதைப் பொறுக்கித் தக்க பத்திய முறைகளுடன் உபயோகிக்கும் திறமை வைத்யனுக்கு அனுபவத்தாலும் யுக்தியாலும் ஏற்படும். அத்திறமை இம்மாதிரி குறிப்பு நூல்களால் ஏற்படக் கூடியதல்ல. எனினும் ஞாபகக் குறிப்பு போன்று ஔஷதங்களின் பொதுவான குணங்களையும் உபயோக முறையையும் இதில் தொகுத்துத்தர முயன்றிருக்கிறோம்.

இது ஔஷத யோக ஸங்கிரஹத்தின் துணை நூலாக வைத்யர்களுக்கும் பொதுமக்களுக்கும் பயன்படும் என நம்புகிறோம்.

உ

श्रीधन्वन्तरये नमः

# ஔஷத குண ஸங்கிரஹம்

## ஆஸவாரிஷ்டங்கள்

**பொது குணங்கள்** : இவை உள்ளுறுப்புகளுக்குச் சுறுசுறுப்பையும் பசியையும் அளிக்கும். உண்ட உணவை சீக்கிரமாக ஜீர்ணமாக்கி உதவும். வயிற்றில் ஏற்படும் வாயுவையும் மல மூத்திரங்களையும் சரியாக வெளிப்படுத்தும். சில ஆஸவாரிஷ்டங்களைத் தவிர மற்றவை பொதுவாக மலத்தை இளக்காது. மலத்தின் திரவாம்சத்தைக் குறைத்துக் கெட்டிப்படுத்தும்.

**பொதுவான அளவு** : நடு வயதுள்ளவர்கள் 15 - 30 மிலி லிட்டர் சாப்பிடலாம். விசேஷ நிலையில் அளவைக் கூட்டியோ குறைத்தோ சாப்பிடலாம். பலக்குறைவுள்ளவர்களும் வயதானவர்களும் 10 - 15 மிலி லிடர் அளவும், சிசுக்களும் குழந்தைகளும் 5 - 10 மிலி லிடர் அளவும் சாப்பிடுவது நல்லது.

ஆஸவாரிஷ்டங்களை உணவிற்குப் பின்னரே பொதுவாகச் சாப்பிடுவது வழக்கம். சில விசேஷ வியாதி நிலைகளில் முன்னரும் பின்னரும் உபயோகிக்கலாம்.

வீர்யமதிகமுள்ள ஆஸவாரிஷ்டங்களை குடல் பலத்தை யொட்டிச் சம அளவிலோ அதிகமாகவோ ஆறிய வென்னீர் அல்லது சுத்த ஜலம் கலந்து சாப்பிடுவது நல்லது. வியாதி பலத்திற்கேற்பவும் தேவைக்கேற்பவும் ஒரு நாளில் 2 - 4 வேளை வரை சாப்பிடலாம். குறைந்த அளவில் அடிக்கடி சாப்பிடுவதால் சில நோய்களில் நல்ல குணம் கிடைக்கும்.

**அசோகாரிஷ்டம்** : ஸ்த்ரீகளுக்குக் கர்பாசயத்தைச் சுத்தி செய்து அதன் உள்ளும் புறமும் ஏற்படும் பல நோய்களைக் குணமாக்குவதில் இம்மருந்து மிகவும் உதவுகின்றது. பெரும்பாடு, மாதவிடாய் காலங்களில் மாதவிடாய் சரியாக வெளியாகாமல் இடுப்பு வலி, ஜ்வரம், வாந்தி, தலைவலி முதலிய உபத்திரவங்கள், வெள்ளை படுதல், கர்ப்பாசயம் நழுவுதல்,

பீஜகோசத்தில் புண் முதலிய ஸ்த்ரீகளுக்கான தனிப்பட்ட வியாதிகளில் சிறந்த உதவியளிக்கின்றது. ஸ்த்ரீகளுக்கு மாதவிடாய் நோய்களால் ஏற்படும் பாண்டு. காங்கை, அருசி, அக்னி மந்தம் போன்ற உபத்திரவங்களையும் போக்கிக் கர்ப்பாசயத்திற்குப் பலமளிக்கின்றது. நல்ல பசி, பலம், உற்சாகமளிக்கவல்லது.

**அச்வகந்தாரிஷ்டம் :** மூளைக்கும் நரம்புகளுக்கும் தசைகளுக்கும் அவைகளின் மூலமாக இயங்கும் வாயுவிற்கும் பலம் தரக்கூடியது. மூளைக்கு அமைதி, பலம், உற்சாகம், தெளிவு அளிக்கும், மூர்ச்சை, அபஸ்மாரம், ஹிஸ்டீரியா, பரபரப்பு, பய உணர்ச்சி, சித்தப் பிரமை, மறதி, மற்றும் இது போன்று நரம்புத் தளர்ச்சியாலோ, நரம்புகளின் உத்வேகத்தாலோ ஏற்படுகிற அதிமூத்திரம், மலபந்தம், தலைவலி, கவனக்குறைவு, பலவீனம் இவைகளில் நல்லது. பிரஸவித்த மாதருக்கு ஏற்படுகிற மன அதிர்ச்சி, நரம்புத் தளர்ச்சி முதலியவைகளில் நல்ல குணம் தரக்கூடியது.

**அபயாரிஷ்டம் :** இது நல்ல மலமிளக்கியாகும். வாயுவையும் பித்தத்தையும் வெளிப்படுத்தி குடலுக்கு ஊக்கமும் வலிவுமளிக்கவல்லது. ஜீர்ண சக்தி, பசி முதலியவைகளை அளிக்கும். மலமும் மூத்திரமும் சரியே வெளிப்படாமல் குடலில் தங்கி ஏற்படும் மூலம், உதரம், அக்னிமந்தம் நீரடைப்பு, கல்லீரல் மண்ணீரல் வீக்கம், பாண்டு, காமலே, ஹ்ருதய ரோகம், அருசி, உடல் வீக்கம், கிருமி, நாட்பட்ட ஜ்வரம், விஷமஜ்வரம், மாதவிடாய் சிக்கல் இவைகளில் நல்லது.

**அம்ருதாரிஷ்டம் :** - ஜ்வரத்தில் காணும் கண்ணெரிவு, தாபமிகுதி, உடல்வலி, தலேபாரம் முதலியவைகளைக் குறைத்து ஜ்வரத்தை தணிக்க வல்லது. பொதுவாக எல்லா ஜ்வரங்களிலும் முக்யமாக நாட்பட்ட ஜ்வரங்கள், காங்கை, தாது க்ஷயம் ஏற்படக்கூடிய ஜ்வரம், காமாலை, ஈரல் குலை கட்டிகளில் ஏற்படும் ஜ்வரம், ஸூதிகாஜ்வரம் முதலியவைகளிலும் மிகவும் நல்லது.

**அரவிந்தாஸவம் :** இது பாலர்களுக்கு மிகவும் ஹிதமான ரஸாயனம். உட்காங்கையைப் போக்கி புஷ்டி பலம் ஜீர்ண சக்தி

அளிக்கக்கூடியது உடல் வளர்ச்சி, கபத் தொந்தரவு, காங்கை இருமல் மலமிளகிப் போதல், உடல் ஒட்டிப் போகுதல், எப்பொழுதும் சிடுசிடுவென ஆத்திரத்துடன் அழுதல், மார்புக்கூடு பின்னுதல், நிற்கவோ, உட்காரவோ சக்தியற்று படுத்துக் கொண்டிருத்தல், சிறிதளவு அபத்தியம் ஏற்பட்டாலும் ஜ்வரம் மார்ச்சளி அதிசாரம் முதலியவை ஏற்படுதல் இவைகளைப் போக்குகின்றது.

**அர்ஜுநாரிஷ்டம்** : ஹிருதயத்திற்கும் சுவாஸாசயத்திற்கும் பலமளித்து அவைகளின் பலக்குறைவால் ஏற்படும் பாண்டு வீக்கம், ஹிருதயப்படபடப்பு முதலியவைகளைப் போக்கும்.

**கதிராரிஷ்டம்** : ரஸ ரக்தங்கள் கெட்டு துர்நீர் மிகுந்து அதன் மூலம் மற்ற தாதுக்களும் கெட்டுத் தோலில் வெளியாகிற நோய்களில் இதன் உபயோகம் மிகவும் நல்லது. முக்யமாக அரிப்பும் தடிப்புமுள்ள தோல் நோய்கள் ஹ்ருதய நோய், பாண்டு கிருமி, காசம், மண்ணீரல் வீக்கத்தால் ஏற்படும் உதரம் இவைகளிலும் பயன்படுகின்றது. கடினமான தோல் ரக்தம் சம்பந்தப்பட்ட நோய்களில் ரக்த சுத்திக்கும் பசியைத் தூண்டவும், தோலைச் சுத்தமாக்கி அதற்கு சுய நிறத்தையளிக்கவும், ரக்தக் கெடுதலால் ஏற்படும் ஹிருதயப்படபடப்பு வேதனை முதலியவைகளைக் குறைக்கவும் இது நன்கு உதவுகின்றது.

**கனகாரிஷ்டம்** : நல்ல ருசியும் ஜீர்ண சக்தியும் ஹிருதயத்திற்குப் பலமும் பித்த சமனமும் புஷ்டியுமளிக்க வல்லது, ஆரம்ப நிலையிலுள்ள மூல நோய், கிரஹணீ, வயிற்று உப்பிசம், உதரம் காங்கை, பசியின்மை ருசியின்மை, மலமிறுகிப் போதல், இருமல், ரஸாயனிகளின் அடைப்பால் ஏற்படும் உடல் கனத்தல், வீக்கம், பாண்டு, மார்பில் கபம் கட்டுதல் இவைகளில் மிகச்சிறந்த வகையில் உதவுகின்றது.

**கிராதாரிஷ்டம்** : ஜ்வரத்தின் ஆரம்ப காரணமான மப்பையும் அக்னி மந்தத்தையும் போக்கி ஜ்வரத்தைத் தணிக்க உதவும். சிறந்த கஷாயச் சரக்குகளாலான அரிஷ்டம். எல்லா வகை ஜ்வரங்களிலும் முக்கியமாக நாட்பட்ட குளிர் ஜ்வரத்தில் தொடர்ந்தும் உபயோகிக்கத் தகுந்தது. அருசி, பசியின்மை, கல்லீரல் அசதி முதலியவை நீங்கி உடல் சுறுசுறுப்படையும்.

ஜ்வரத்துடன் ஈரல் குலைக்கட்டியுள்ளவர்களுக்குச் சிறந்த துணை மருந்து.

**குடஜாரிஷ்டம்** : குடலின் அழற்சி, நாட்பட்ட ஜ்வரம், அதிஸாரம், கிரஹணீ, கிருமி, அக்னி மந்தம், அருசி, பலக்குறைவு, மலத்துடன் ரத்தம் சீதம் விழுதல், கபத்துடன் இருமல், ச்வாஸம் இவைகளிலும் முக்கியமாக ஜ்வரமும் சீதத்துடன் மலப்போக்குமுள்ள எல்லாவித கிரஹணி பிரவாஹிகைகளிலும் ஈரல் குலைக்கட்டிகளிலும் நல்லது. தொடர்ந்து சாப்பிட குடலுறுப்புகள் வலிவடைந்து ஆரோக்கியம் எளிதில் கிடைக்கிறது. அதிக மலப்போக்கைக் கட்டுப் படுத்தினாலும் மலபந்தத்தை உண்டாக்குவதில்லை.

**குமார்யாஸ்வம்** : உடலில் அயக்குறைவால் ஏற்படும் பல்வேறு நோய்களில் பயன் தருகின்றது. உணவுச்சத்து உள்ளே சேருவதைத் தடைபடுத்துகிற நோய் நிலைகளில் முக்கியமாக உதரம், மண்ணீரல், கல்லீரல் நோய், பாண்டு, காமலை, மலச்சிக்கல், கிருமி, வீக்கம், வயிற்று உப்புசம் முதலியவைகளில் உதவுகின்றது. பலம், பசி, ஜீர்ணசக்தி, புஷ்டி அளிக்கின்றது. ஜீர்ணமாகுங்கால் ஏற்படும் வயிற்று வலி, குல்மம், கிரஹணி, ஸ்த்ரீகளுக்கு மாதவிடாய் காலத்தில் ஏற்படும் ருது சூலம் முதலியவைகளிலும் நல்ல துணை மருந்து.

**சந்தனாஸவம்** : உடற் காங்கையைக் குறைத்து வெட்டைச் சூட்டைப் போக்கவல்லது. ஆகையால் வெட்டை நீர்த்தாரை எரிச்சல், ஸ்வப்ன ஸ்கலிதம் பித்தப் பிரமேஹங்கள், உடல் இளைப்பு, உட்காங்கை, முதலியவைகளிலும் இவைகளால் ஏற்படும் ஹிருதய பலக்குறைவிலும் மிகச் சிறந்து விளங்குகின்றது.

**ஜீரகாத்யரிஷ்டம்** : பிரஸவித்த மாதருக்கு நல்ல ரஸாயனம். ஜீர்ண உறுப்புகளின் பலக்குறைவு கிரஹணீ அதிஸாரம், பசியின்மை, வயிற்று உப்புசம் முதலியவைகளை நீக்கும். ஜீர்ண சக்தி உண்டாகும். கர்ப்பாசயத்தில் அழுக்குத் தங்கல் முதலியவை ஏற்படாமல் செய்து கர்ப்பாசயத்தைச் சரியாகச் சுருங்கச் செய்யும்.

**தசமூலாரிஷ்டம்** : ருசி புஷ்டி பலம் உற்சாகம் அளிக்கிற நல்ல ரஸாயனம். தாதுக்ஷயம், பசியின்மை, அசதி, கிரஹணீ,

ச்வாஸம், காஸம், வாதநோய்கள். வாந்தி காங்கை, மார்சளி முதலிய நோய்களில் மிகவும் உதவுகின்றது. கர்ப்பாசயத்திற்கு பலமளித்து கர்ப்பஸ்ராவம் முதலியவை ஏற்படாமல் தடுத்து ஸுகப்பிரஸவமாகச் செய்யும். இதை கர்ப்பம் தரித்தது முதல் தொடர்ந்து சாப்பிட நல்லது. பிரஸவித்த பின்னரும் தொடர்ந்து சாப்பிட ஸூதிகா ரோகங்களிலிருந்தும் பாதுகாப்பளிக்கின்றது.

**திராக்ஷாரிஷ்டம்** : நல்ல பசி, உடல் வலிவு உத்ஸாகம் அளிக்க வல்லது. மலத்தை இளக்கி எளிதில் வெளியேற்ற வல்லது. அசதி கபம், இருமல், ஜ்வரம் பலவீனம், அருசி, கிரஹணீ இவைகளில் நல்ல துணை மருந்து. நோயாளி துர்பலனாகி, இருமலின் வேகமதிகமாகி கப அடைப்பு இருக்கும் போது கபத்தை இளக்கவும் இருமலின் வேகத்தைக் குறைக்கவும் அயர்வு பலவீனம் நீங்கவும் பெரிதும் பயன்படுகின்றது. உத்ஸாஹக் குறைவு, பசியின்மை, அன்னத்வேஷம் மலபந்தம் போன்ற உபத்திரவங்களில் நன்கு பயன்படுகின்றது.

**பப்பூலாரிஷ்டம்** : அதிஸாரம், பிரமேஹம், ச்வாஸம், காஸம் இவைகளில் சிறந்தது. கபத்தை வெளிப்படுத்தவும் ரத்தத்தை நிறுத்திப் புண்ணை ஆற்றவும் சிறந்தது. இருமல் இளைப்பு. இருமலுடன் வரும் ரத்தம் முதலியவை குணமாகின்றது. பசி நன்கு தூண்டப்படுவதால் அஜீர்ணத்தால் ஏற்படும் கபமும் குறைகின்றது. குடல் புண்ணுடன் ரத்தத்துடனும் கபத்துடனும் போகும் அதிஸாரத்திலும் இது நன்கு பயன்படுகின்றது.

**பலாரிஷ்டம்** : வாதரோகங்களிலும் நரம்புத்தளர்ச்சியிலும் மிகச்சிறந்த ஔஷதம், பலம், புஷ்டி, பசி இவைகளை வளர்ப்பதுடன் நரம்புகளில் சூடு குறைவதால் ஏற்படும் கடுப்பு, தடிமன், தசைகளில் அயர்வு, பலக்குறைவு முதலியவைகளில் மிகவும் குணம் தருகிறது.

**பிப்பல்யாஸவம்** : நல்ல பசி, ஜீர்ண சக்தி, சுறுசுறுப்பு அளிக்கவல்லது. க்ஷயம், இளைப்பு, கிரஹணீ, பாண்டு, மூலம் இவைகளில் நல்ல உதவியளிக்கின்றது.

**பிருங்கராஜாஸவம்** : ரக்தக்குறைவு, அன்னத்வேஷம் இவைகளைப் போக்கி பாண்டு, காமலே, காஸம், இவைகளில்

பெரிதும் உதவுகின்றது. இளைத்தவர்களைப் பருக்க வைக்கவும், பலம் வீர்யம், இவைகளை அளிக்கவும் சிறந்தது.

**புனர்னவாஸவம்** :. வீக்கம், உதரம், கல்லீரல், மண்ணீரல், வீக்கம், பாண்டு, காமலே அம்லபித்தம், குல்மம், நாட்பட்ட ஜ்வரம், காஸம், சுவாஸம், மலக்கட்டு, ஹிருதயநோய் இவைகளில் குணம் தருகிறது. வீக்கத்தையும் மல மூத்திராதிகளின் தடையையும் போக்குகின்றது.

**முஸ்தகாரிஷ்டம்** : அக்னி மந்தத்தால் ஏற்படும் அதிஸாரம் கிரஹணி இவைகளில் நல்லது. ஜ்வரத்துடன் ஏற்படும் அதிஸாரத்திலும் நல்ல குணமளிக்கும். நாட்பட்ட அதிஸாரமுள்ளவர்களுக்கு அக்னி மந்தத்தைப் போக்கி ஜீர்ண சக்தியை அளிக்கவல்லது.

**ரோஹிதகாரிஷ்டம்** : கிரஹணி, பாண்டு, ஹிருதய நோய், குல்மம், உதரம், மூலம், வீக்கம், அருசி இவைகளில் நல்லது. கல்லீரல், மண்ணீரல் பெருக்கத்தால் குழந்தைகளுக்கோ பெரியோர்களுக்கோ ஏற்படும் அசதி, அருசி, பசியின்மை, வயிற்று பொறுமல், அன்னத்வேஷம், முதலிய உபத்திரவங்களில் மிகச் சிறந்தது.

**லோஹாஸவம்** : காங்கை, காமாலை, வீக்கம், அக்னிமந்தம், உதரம், கல்லீரல், மண்ணீரல் வீக்கம், அரிப்பு, அருசி, கிரஹணி, ஹிருதய நோய் இவைகளில் ஏற்படும் ரக்தக்குறைவை நீக்கத் தகுந்தது. குடலேத் துன்புறுத்தா வண்ணம் இதில் உள்ள அயச்சத்து நாட்பட்ட ஜ்வரம் மலேரியா ஜ்வரம் முதலியதால் ஏற்படும் ரத்தக்குறைவு, அசதி காங்கை, பலவீனம், பசிமந்தம் இவைகளைப் போக்குகின்றது.

**வாஸாரிஷ்டம்** : கபத்தாலோ அழற்சியாலோ ஏற்படும் அடைப்பை நீக்கி வீக்கத்தைக் குறைக்கவல்லது. காஸம், ச்வாஸம், வீக்கம், ஆமவாதம், பாண்டு, காமலே முதலியவைகளில் சிறந்தது.

**ஸாரஸ்வதாரிஷ்டம்** : மூளையின் சக்திக் குறைவு. ஞாபகமறதி, தொண்டைக்கம்மல், பேச்சுத்தடை, புரியாமல் பேசுவது இவைகளைப் போக்கவும் மேதை, ஞாபகசக்தி,

பேச்சுவன்மை பலம் பெறவும் சிறந்தது. நல்ல ரஸாயன மருந்தாகும். ஸ்த்ரீகளுக்கு ஏற்படும் சங்கைக் கோளாறு. மாதவிடாய் சமயத்தில் வலி முதலியவைகளையும் போக்கும். கர்ப்பாசயத்தைப் பலப்படுத்தும்.

**ஸாரிவாத்யாஸவம் :** ரக்தத்தில் ஏற்படும் கொதிப்பு ,முற்சி மிகுதியால் ஏற்படும் சினப்பு, அரிப்பு, சிரங்கு முதலியவைகளில் நல்லது. உடலில் பரவிய விஷ சக்தியைக் குறைக்கும்.

**ஸுஷவீ 1 :** (பிரஸவ மருந்து) மாதர் பிரஸவித்ததும் ஸுஷவீ வடியுடன் சேர்த்து முதல் ஐந்து நாட்களுக்குச் சாப்பிட வேண்டியது. கர்ப்பாசயத்திற்கும் பலமளித்து ஒழுங்காய் சுருங்க வைத்து ஸுதிகா நோய்கள் வராமல் பாதுகாக்கும்.

**ஸுஷவீ 2:** (பிரஸவ மருந்து) மாதர் பிரஸவித்ததும் ஸுஷவீ வடியுடன் சேர்த்து இரண்டாவது ஐந்து நாட்களுக்குச் சாப்பிட வேண்டியது. கர்ப்பாசயத்திற்கும் பொதுவாக உடலுக்கும் பலம் தரக்கூடியது. ஸுதிகா நோய்கள் வராமல் பாதுகாக்கும்.

## அர்க்கங்கள்

**அஜமோதார்க்கம் :** தினசரி உபயோகத்திற்கேற்ற ஜீர்ணகாரி, குடலில் வாயு, மப்பான மலம் இவை தங்குவதால் ஏற்படும் பொறுமல், இடுப்பு வலி, முதுகு வலி, அதிஸாரம், வயிற்று வலி, கிருமி முதலியவைகளைப் போக்குகின்றது. குடலோட்டம், குடல் பலவீனம் உள்ள குழந்தைகளுக்கு மிகவும் நல்லது. அளவு : குழந்தைகள் 1/2 - 2 ஸ்பூன். பெரியோர்கள் 15 - 30 மிலி லிட்டர்.

**சந்தநாத்யர்க்கம் :** உள்ளெரிவு, பித்தஜ்வரம், பித்தப் பிரமம், நாவரட்சி, சூட்டினால் தலைவலி, அருசி முதலியவைகளில் நல்ல அனுபானம். அளவு : குழந்தைகள் 1 - 2 டீஸ்பூன் . பெரியோர்கள் 15 - 60 மிலி லிடர்.

**பஞ்சஜீரகார்க்கம் :** குடலில் வாயுக்கட்டு, கர்ப்பாசயத்தில் உதிரக்கட்டு, சிறுநீர்க்கட்டு, இவைகள் ஏற்பட்டுள்ள நிலையில் நல்ல அனுபானம். இந்நிலைகளில் கட்டைப் பிரித்து

வேதனையைக் குறைக்கும். அளவு : குழந்தைகள் 1-2 டீஸ்பூன். பெரியோர்கள் 15 - 60 மிலி லிடர்.

**மிசிபுஷ்பார்க்கம்** : பஞ்சஜீரகார்க்கத்தை ஒத்தது. சீதபேதியில் வயிற்றுக்கடுப்பைக் குறைக்கும். அஜீர்ணம் ஜ்வரவேகம் இவைகளைப் போக்கும். அளவு : குழந்தைகள் 1 -2 டீஸ்பூன். பெரியோர்கள் 15 - 60 மிலி லிடர்.

**ஸாரிவார்க்கம்** : உடலில் பித்த காங்கையைக் குறைக்கும், கோடைக்கட்டி, சினப்பு, தோல் சிவத்தல், காணாக்கடி, அரிப்பு, சூட்டினால் ஏற்படும் இருமல், அஜீர்ணம் முதலியவைகளில் நல்லது. அளவு : குழந்தைகள் 1 - 2 டீஸ்பூன். பெரியோர்கள் 15 - 60 மிலி லிடர்.

## சூர்ணங்கள்

**அச்வகந்தாதி சூர்ணம்** : - காங்கையால் ஏற்படும் உடல் வரட்சி. இளைப்பு இவைகளில் நெய்யுடனும், உடல் இளைத்து கபநோய்கள் அடிக்கடி ஏற்பட்டு இருமல், மார்ச்சளி முதலிய உபத்திரவங்கள் இருக்கும் போது தேனுடனும், பித்தத்தால் தலை சுற்றுதல், தலைவலி, ஒத்தைத் தலைவலி, விலாவெரிச்சல், முதலியவைகளில் பசுவின் பாலுடனும் சாப்பிட நல்லது. உடலின் இளைப்பைப் போக்கி, பலம், புஷ்டி, பசி தூக்கம், நரம்பு தசைகளுக்கு வலிவு இவைகளையளிக்க வல்லது. அளவு : குழந்தைகள் 3- 6 டெஸி க்ராம். பெரியோர்கள் 1- 3 க்ராம்.

**அபயாதிஷட்கம்** : வயிற்றுக் கடுப்பின் கடும் வேதனையைக் குறைத்து சீதரக்தப் போக்கை நிறுத்தும். அனுபானம் தேன், ஜலம், அளவு : குழந்தைகள் 2-4 டெஸிக்ராம் பெரியோர்கள் 1/2 - 1 க்ராம்.

**அஷ்டசூர்ணம்** : சாப்பிடும் போது முதற் கவளத்துடன் நெய் சேர்த்துச் சாப்பிடச் சிறந்த ஜீர்ணகாரி, வயிற்றில் வாயுத்தங்கல், மார்புவலி, முதுகுவலி, வயிற்றுவலி, இடுப்பு வலி, அஜீர்ணம், அஜீர்ண அதிஸாரம், ருது காலத்தில் ஏற்படும் வரள்வாயுவலி, பசியின்மை இவைகளில் நல்ல குணம் தரும். அனுபானம், நெய், தேன், வென்னீர் மோர். அளவு : குழந்தைகள் 2 - 6 டெஸிக்ராம். பெரியோர் 1- 2 க்ராம்.

**கர்ப்பூராதி சூர்ணம் :** வரண்ட இருமல், தொண்டைக் கம்மல், விக்கல், அருசி, இடுப்பு வலி அதிசாரம், கிரஹணி இவைகளில் நல்லது. அனுபானம் தேன், நெய், அளவு : குழந்தைகள் 1- 2 டெஸிக்ராம். பெரியோர்கள் 1/2 - 2 க்ராம்.

**கல்யாணக்ஷாரம் :** குடலில் வாயு எதிர்த்து நிற்பதால் ஏற்படும் குல்மம். வயிற்று வலி, முதுகுவலி, உதரம், கல்லடைப்பு, வயிற்று வீக்கம், ஹிருதய நோய் - கல்லீரல் - மண்ணீரல் வீக்கம், சுவாசம். காஸம் முதலியவைகளில் வாத - மல மூத்திரங்களின் தடையை அகற்றி அவைகளைச் சரியே வெளியேறச் செய்து குடலுக்கு பலமளித்து வியாதியைப் போக்குகின்றது. அனுபானம் நெய் - மோர் அளவு : குழந்தைகள் 1-2 டெஸிக்ராம். பெரியோர் 1- 2 க்ராம்.

**க்ராஹிணி சூர்ணம் :** - அஜீர்ணத்தால் ஏற்படும் பேதி, வயிற்றுக் கடுப்பு, சீதபேதி இவைகளில் நல்லது. அனுபானம் தேன் - ஜலம், அளவு. குழந்தைகள் 1- 2 டெஸிக்ராம். பெரியோர்கள் 1/2 - 1 க்ராம்.

**கோக்ஷுராதி சூர்ணம்** - சிறுநீர் கட்டி சரியே வெளியேறாதிருப்பதால் ஏற்படும் குல்மம், வீக்கம், உதரம், வயிற்று உப்புசம், நீரடைப்பு முதலிய நோய்களில் நன்கு உதவுகின்றது. மூத்திரத்தடையைப் போக்கி சிறுநீரைச் சரியே வெளியாக்குகின்றது. அனுபானம், வென்னீர், நெய், அளவு: குழந்தைகள் 1-3 டெஸிக்ராம், பெரியோர் 1-2 க்ராம்.

**சதுஸ்ஸம சூர்ணம் :** அஜீர்ணம், அஜீர்ணாதிஸாரம், கிரஹணீ இவைகளில் மலமிளகிப் போவதை நிறுத்தும். பசி ஜீர்ணசக்தி உண்டாகும். அனுபானம், தேன் மோர், அளவு : குழந்தைகள் 1 -2 டெஸிக்ராம். பெரியோர் 1/2 - 1 க்ராம்.

**சந்திரிகா சூர்ணம் :** ரக்தக் கொதிப்பையும் அதனால் ஏற்படும் தலை சுற்றுதல், எரிச்சல், உடல் கனத்தல், படபடப்பு, மயக்கம், தூக்கமின்மை, உந்மாதம், முதலியவைகளைக் குறைக்கும். வ்யாதி பலம் குறைந்ததும் மருந்தின் அளவைக் குறைத்தும் நிறுத்தியும் கவனித்து உபயோகிக்க வேண்டும். அனுபானம் சர்க்கரை ஜலம், தேன் அளவு : பெரியோர் 1/4 - 1 க்ராம்.

**சிருங்கபேராதி சூர்ணம்** : அன்னத்வேஷம், உமட்டல், வாந்தி, அருசி, வயிற்றில் கனம், அஜீர்ணம் இவற்றில் நல்லது. அனுபானம் - ஜலம், குழந்தைகள் 1/2 க்ராம். பெரியோர்கள் 1-3 க்ராம்.

**சிரோலேப சூர்ணம்** : ஜ்வரம், தலைபாரம், பீநஸம், தலைவலி இவைகளில் நெற்றி முன்தலை இவைகளில் பற்றுப் போட உதவும். ஜலம் விட்டுக் குழப்பிச் சுட வைத்து இளம் சூட்டுடன் பத்துப் போடவும்.

**ச்லீபதஹர லேபசூர்ணம்** : யானைக்கால் வீக்கத்திற்கு மேலுக்குப் பற்றுப்போட உதவும். மோரிலோ புளித்த காடியிலோ ஜலத்திலோ நொச்சிச் சாற்றிலோ கருஊமத்தை இலைச் சாற்றிலோ குழைத்து சுட வைத்துப் பத்துப் போடலாம்.

**தந்த சூர்ணம்** : பற்களைச் சுத்தமாக்க தினசரி உபயோகத்திற்கான பல் பொடி, வாய் நாற்றம், பற்களில் சீழ் தங்குதல், கரைபிடித்தல், பல்வலி இவைகளைக் குணமாக்கும்.

**தாளீஸாதி சூர்ணம்** : நாட்பட்ட ஜ்வரம், காஸம், ச்வாஸம், அருசி, வாந்தி, மார்புவலி, விலாவலி அஜீர்ண அதிஸாரம் இவைகளில் நல்ல துணை மருந்து. வயிற்றில் வாயு தடைபடுவதைப் போக்கும். தொண்டைக்கு ஹிதம், ஜீர்ணகாரி. அனுபானம் தேன். நெய், பால், சர்க்கரை ஜலம் அளவு குழந்தைகள் 1/4 - 1/2 - க்ராம். பெரியோர்கள் 1-2 க்ராம்.

**த்ரிபலாசூர்ணம்** : இதை ரஸாயனமாக உபயோகிப்பதுண்டு. கபமும் பித்தமும் சேர்ந்து கெட்டு ஏற்படும் நோய்களில் விசேஷமாக முறை ஜ்வரம். கபகாஸம். தோல் நோய் முதலிய்வைகளில் நல்லது. நல்ல மலமிளக்கி. கஷாயமாகத் தயாரித்து வாய்ப்புண். தொண்டைப்புண், இவைகளில் வாய் கொப்புளிக்கவும், புண்களை அலம்புவதற்கும், கண் நோய்களுக்கும் உபயோகிக்கலாம். உடலுறுப்புகளைச் சீராக இயக்கி வைக்கும் உத்தம மருந்து. அனுபானம் நெய் - தேன். அளவு : 1 - 6 க்ராம்.

**நீலீலேப சூரணம்** : தோலில் வெண்மை (வெண் குஷ்டம்) உள்ளவர்கள் இதனை ஜலத்தில் குழைத்து வெண்மையுள்ள இடங்களில் பூசி வருவதால் சுய நிறம் வரும்.

**பஞ்சஸகார சூர்ணம் :** நல்ல மலமிளக்கி, ஜீர்ணசக்தி, பசி அளிக்கும். மலக்கட்டு இயற்கையாக இருந்தால் இதைத் தொடர்ந்து சாப்பிட மலபந்தப் பழக்கம் மாறும். அனுபானம். சர்க்கரை ஜலம். அளவு : பேதியாகச் சாப்பிட 3 - 6 க்ராம். தினமும் சாப்பிட 2 - 4 க்ராம்.

**பலி சூர்ணம் :** - வயிற்றுக்கடுப்புடன் சீதமாகவும் ரக்தமாகவும் சிறிது சிறிதாகப் பேதியாகிற நிலைகளில் குடல் அழற்சியைக் குறைத்துக் கடுப்பைக் குறைத்து மலப் போக்கைக் கட்டுப்படுத்தக் கூடியது. அனுபானம் தேன் நெய். அளவு 1/2 - 2 க்ராம்.

**பாடாதி சூர்ணம் :** வயிற்றுக் கடுப்புடனும் ஆஸனவாய் எரிச்சலுடனும், கொதிப்புடனும் சிறிது சிறிதாக மலம் கட்டிப் போவதையும் இதனுல் ஏற்படும் மூலத்தையும் குணப்படுத்தும். நல்ல பசி, ஜீர்ண சக்தியளிக்கும். அனுபானம் தேன், நெய், மோர், அளவு : குழந்தைகள் 3- 6 டெஸிக்ராம். பெரியோர் 1 - 2 க்ராம்.

**பாலாஷ்டக சூர்ணம் :** சிசுக்களுக்குப் பற்கள் முளைப்பதன் முன்னும் பின்னும் ஏற்படும் பல நோய்களிலும் குழந்தைகளின் ஆரோக்யப் பாதுகாப்பிலும் சிறந்த ஜீர்ணகாரி மருந்து. அதிஸாரம், ஜ்வரம், பாண்டு, காஸம் முதலியவைகளில் தகுந்த துணை மருந்து. அனுபானம் நெய் - தேன். அளவு : குழந்தைகள் 1- 6 டெஸிக்ராம்.

**பாஸ்கரலவணம் :** அக்னிமந்தம், அஜீர்ணம், குல்மம், மண்ணீரல் - கல்லீரல், பருத்தல், உதரம், மூலம், கிரஹணி, மலபந்தம், வயிற்றுவலி, வீக்கம், ச்வாஸம், காஸம், ஹிருதய நோய், விலாவலி முதலியவைகளில் வயிற்றில் வாயுத்தடங்கலையும் அடைப்பையும் போக்கி வேதனையைக் குறைக்கின்றது. நல்ல ஜீர்ண சக்தி. பசி அளிக்கும். அனுபானம் மோர், வென்னீர், நெய். அளவு : குழந்தைகள் 1/2 - 1 க்ராம். பெரியோர்கள் 1-3 க்ராம்.

**புஷ்யானுக சூர்ணம் :** ஸ்த்ரீகளின் மாதவிடாய் பெருக்கு நோய்களிலும், ரக்தாதிஸாரம், ரத்தமூலம் இவைகளிலும் ரத்தப்போக்கை நிறுத்திப் புண்ணை ஆற்றுகிறது. மாதவிடாய் காலங்களில் பலவித நிறங்களில் உதிரம் வெளிப்படுவதை

சிராக்கிச் சரியாக மாதவிடாயாக உதவுகின்றது. அனுபானம் தேன், அரிசி களைந்த ஜலம். அளவு: குழந்தைகள் 2- 6 டெஸிக்ராம் பெரியோர் 1- 3 க்ராம்.

**ராஸ்நாதிசிரோலேப சூர்ணம்** : ஜ்வரம், தலைவலி, பீநஸம் முதலியவைகளில் நீர் அடைப்பு நீங்கவும் அப்யங்கம் - ஸ்நானம் முதலியவைகளுக்குப்பின் நீர் குத்தல், தலைவலி ஏற்படாமலிருக்கவும் தலைக்குத் தேய்த்துக் கொள்ளத் தக்கது. ஆமணக்கெண்ணெய் அல்லது நெய்யில் குழப்பித் தடவிக் கொள்வதுமுண்டு.

**வசாக்ஷாரம்** : வாந்தி, வயிற்று உப்புசம், நீர்பேதி இவற்றில் நல்லது. அனுபானம் தேன். அளவு : குழந்தைகள் 1-2 டெஸிக்ராம். பெரியோர் 4 - 6 டெஸிக்ராம். இதனை ஜலத்தில் குழைத்து வயிற்றின் மேல் பூசலாம்.

**வாதசோணிதஹரலேப சூர்ணம்** : வீக்கங்களில் பற்றுப் போட ஏற்றது. நரித்தலை வாதம் யானைக்கால் வீக்கம், கிரந்தி, கண்டமாலை, வாயுவலி முதலிய நோய்களில் ஜலத்திலோ புளித்த மோரிலோ புளித்த காடியிலோ எலுமிச்சப் பழச்சாற்றிலோ குழப்பிச் சுடவைத்து பத்துப் போடவும்.

**வைச்வாநர சூர்ணம்** : நல்ல ஜீர்ணகாரி. அஜீர்ணம் அஜீர்ணதிஸாரம் வயிற்று உப்புசம் இவைகளில் பாசன தீபனமாகக் கொடுக்க நல்லது. அனுபானம் நெய், தேன், ஜலம், அளவு : குழந்தைகள் 3 - 6 டெஸிக்ராம் - பெரியோர்கள் 1 - 3 கிராம்.

**ஸாரஸ்வத சூர்ணம்** : தொண்டையில் ஏற்படும் கபக்கட்டு, கம்மல், பேச்சுக்குளறல் அஜீர்ணம், காஸம் முதலியவைகளில் நல்லது. அனுபானம் தேன், நெய், அளவு : குழந்தைகள் : 3 - 6 டெஸிக்ராம். பெரியோர்கள் 1/2 - 1 க்ராம்.

**ஸிதோபலாதி சூர்ணம்** : காங்கை, காஸம், ச்வாஸம், தொண்டைக் கம்மல், கமருதல், நாக்கு மறத்திருத்தல், அருசி, அக்னிமந்தம், மார்புவலி, கைகால் உடல் எரிச்சல், ஜ்வரம் இவைகளில் நல்லது. அனுபானம் தேன், நெய், பால். அளவு : குழந்தைகள் 3 - 6 டெஸிக்ராம். பெரியோர் 1 - 3 க்ராம்.

**ஸுதர்சன சூர்ணம் :** ஜ்வரத்தின் எல்லா நிலைகளிலும் ஜ்வரதாபம், வாய் கசப்பு, தலைகனம், முதுகு விலா மென்னி முழங்கால் கணுக்கால் இடுப்பு இவைகளில் கடுப்பு வலி முதலியவைகளைக் குறைக்க நல்லது. முறை ஜ்வரங்களைத் தடுப்பதிலும், யானைக்கால் ஜ்வரம் வராமல் தடுப்பதிலும் மிகவும் உதவும். காமாலை, விஷகடி, கல்லீரல், மண்ணீரல் வீக்கம், பாண்டு முதலியவைகளில் ஏற்படும் உட்காங்கையையும் தணிக்கும். அனுபானம் தேன், சர்க்கரை ஜலம், அளவு : குழந்தைகள் - 3 - 6 டெஸிக்ராம். பெரியோர்கள் 1 - 3 கிராம்.

**ஷட்பல்லவ சூர்ணம் :** தோலின் வெண்மையைப் போக்க வல்லது. தொடர்ந்து 1- 2 ஆண்டுகள் உபயோகிக்க வேண்டும். குழந்தைகளுக்கு காப்ஸ்யூலில் வைத்துத் தரலாம். சிறியோர் 3 - 5 டெஸிக்ராம். பெரியோர் 2- 3 க்ராம். அனுபானம் ஜலம்.

**ஸோமாதி சூர்ணம் :** கபகாஸம், தமகச்வாஸம் (ஆஸ்துமா) முதலியவைகளில் ச்வாஸாசயத்தில் கபத்தின் அடைப்பைப் பிரித்து ச்வாஸத்திணறலைக் குறைக்கவல்லது. அனுபானம் தேன், சித்தரத்தைக் கஷாயம், அளவு : குழந்தைகள் 1 - 2டெஸிக்ராம். பெரியோர் 1- 2 க்ராம்.

**ஸ்நான சூர்ணம் :** தினசரி ஸ்நானத்தின் போது தேய்த்துக் குளிக்க நல்லது. உடல் நாற்றத்தைப் போக்கித் தோலுக்குப் பலத்தையும் மென்மையையும் நறுமணத்தையம் அளிக்கும். தயிர் அல்லது ஜலத்தில் 10 - 20 நிமிஷங்கள் ஊரவைத்துப் பின் உடல் முழுவதும் பூசிக் குளிக்கலாம் அரிப்பு, சொரி, ஊறல் நோய் வராமல் பாதுகாப்பளிக்கும்.

**ஸ்வாதிஷ்டவிரேசன சூர்ணம் :** மலபந்தத்தைப் போக்கச் சிறந்தது. தினசரி உபயோகத்திற்கேற்றது. மூல நோயுள்ளவர்களுக்கு நன்கு உதவும். அருசி, வாயில் ஜலம், ஊறுதல், வாய் கசப்பு, வயிற்று உப்புசம் உள்ளவர்கள் மலமிளக்கியாக இதை உபயோகிக்கலாம். அனுபானம் சர்க்கரை ஜலம். அளவு : குழந்தைகள் 1-2 க்ராம். பெரியோர் 2 - 6 க்ராம்.

## க்வாத சூர்ணங்கள்

இந்த சூர்ணங்களைத் தேவையான அளவில் எடுத்துக் கொண்டு 10 மடங்கு ஜலம் விட்டு 4 மடங்கு ஜலம் மீதமாகும்

வரை காய்ச்சி வடிகட்டி உபயோகிக்கவும். ஒரு நாள் அல்லது இரண்டு நாள் உபயோகத்திற்கான கஷாயத்தை ஒரே தடவையில் தயாரித்துக் கொள்ளலாம். அவ்விதம் அதிக வேளைகளுக்குத் தயாரான கஷாயத்தை அவ்வப்போது சற்று சூடாக்கித் தேவையான அளவு வடிகட்டி எடுத்துக் கொள்வது நல்லது. இக்கஷாய சூர்ணங்களை குழந்தைகளுக்கு வேளைக்கு 5 - 10 கிராம் அளவிலும் பெரியோர்களுக்கு 10 - 30 கிராம் அளவிலும் எடுத்துக் கொள்ள வேணும்.

**தசமூலக்வாத சூர்ணம் :** திரிதோஷங்களால் ஏற்படும் எல்லா நோய்களிலும் முக்கியமாக ஸந்நிபாத ஜ்வரம், காஸம், ச்வாஸம், உடல் அசதி, விலாவலி, தொண்டை நோய், மாரடைப்பு, பிரஸவத்திற்குப்பின் ஸூதிகா நோய்கள், அதிக வியர்வை, தலைவலி முதலியவைகளில் ஏற்றது.

**பார்ங்க்யாதிக்வாத சூர்ணம் :** ஜ்வரங்களில், முக்கியமாக முறை ஜ்வரங்களில் எல்லா நிலைகளிலும் கொடுக்கக் கூடியது. தலைவலி, மார்சளி, இருமல் முதலி உபத்ரவங்களைக் குறைத்து ஜ்வர வேகத்தைத் தணிக்க வல்லது.

**பீஜபஞ்சகம் :** (பாண்ட சூர்ணம்) இதை 15 - 30 கிராம் அளவு 200 - 300 மிலிலிடர் ஜலத்தில் ஒரு மணி ஊரப்போட்டு மேல் தெளிவை மட்டும் வடிகட்டி சாப்பிட, சிறுநீர் கொதிப்பு, வயிற்றுக்கடுப்பு, உஷ்ணவாயு, வாயு ஸ்தம்பித்து உப்புசம் முதலியவை நீங்கும்.

**புனர்னவாஷ்டகக்வாதசூர்ணம் :** சிறுநீரையும் வாயுவையும் பிரித்து வெளியேற்றி பாண்டு, வீக்கம், காமாலை, உதரம், கல்லீரல், மண்ணீரல் நோய், ச்வாஸம் இவைகளில் மிகவும் குணம் தரக்கூடியது.

**மஹாதிக்தகக்வாத சூர்ணம் :** தோல் நோய்களில் மிகவும் பயன் தரக்கூடியது. அரிப்பு, சொரி, சிரங்கு, படை, தேமல் புரையோடிய புண், வித்திரதி, அபசீ, அக்கி, உடல் எரிச்சல், கொப்புளம், தலை சுற்றுதல் முதலிய நோய்களில் கைகண்டது.

**மஹாமஞ்சிஷ்டாதிக்வாத சூர்ணம் :** தோல் நோய்களிலும் வாத நோய்களிலும் சிறந்தது. முக்கியமாக பலவித ஆழ்ந்ததும்

நாட்பட்டதுமான தோல் நோய்கள், வாத ரக்தம், யானைக்கால் வீக்கம், கால் கை மறத்துப் போதல், பக்ஷவாயு, மேதஸ் சம்பந்தப்பட்ட நோய்கள் இவைகளில் கொடுக்க வல்லது.

**மஹாராஸ்நாதிக்வாத சூர்ணம்** : கீல்வாயு, தோள் மூட்டுப்பிடிப்பு, வயிற்று உப்புசம், கர்ப்பாசய நோய்கள், இவைகளில் தனியாகவும் யோகராஜ குக்குலு, மஹாயோகராஜ குக்குலு முதலியவைகளுடனும் கொடுக்க நல்லது.

## பானகங்கள்

**ஆத்ரேய ரஸாயனம்** : பலக்குறைவு, ஞாபகசக்திக் குறைவு, பசியின்மை, தலை சுற்றுதல் முதலியவற்றில் நல்லது. நல்ல பசி, புஷ்டி, பலம் தர நல்லது. அளவு 1- 4 ஸ்பூன்.

**ஜம்பீராதி பானகம்** : ருசியும் தீபனமும் மனத் தெளிவு மளிக்கும். சுவையான பானகம். பித்தத்தால் வாய்க்கசப்பு, உமட்டல் வாந்தி அஜீர்ணம், அக்னிமந்தம், நாவரட்சி, உடல் எரிவு, வயிற்று வலி, தலை சுற்றுதல் முதலிய உபத்திரவங்களில் குணம் தரும். உபத்திரவம் மிகுதியாக இருக்கும் போது அடிக்கடி சாப்பிட நல்லது. அளவு : 1-4 ஸ்பூன்.

**பல்ய பானகம்** : ஜீர்ண சக்தியை அதிகப்படுத்தி உணவுச்சத்து உட்சேரும்படி செய்து வலிவு தரக்கூடியது. அளவு 1-4 ஸ்பூன்.

**பார்ங்க்யாதிபானகம்** : பார்ங்க்யாதி கஷாயத்தைப் போல ஜ்வரத்தில் எல்லா நிலைகளிலும் நல்லது. அளவு : 1 - 4 ஸ்பூன்.

**மஹா திக்தபானகம்** : தோல் நோய்களில், முக்கியமாக அரிப்பு, சொரி, சிரங்கு, எரிச்சல் உள்ளவைகளில் நல்லது. அளவு : 1 - 4 ஸ்பூன்.

**மஹாராஸ்னாதி பானகம்** : கீல்வாயு, மூட்டுப்பிடிப்பு, வலி, வீக்கம், இவைகளில் நல்லது. யோகராஜ குக்குலு முதலியவற்றிற்கு அனுபானமாகவும் தரலாம். அளவு : 1 - 4 ஸ்பூன்.

**மஹா மஞ்சிஷ்டாதிபானகம்** : மஹா மஞ்சிஷ்டாதி கஷாயத்தைப் போல் வாத ரக்தம். யானைக்கால் காணாக்கடி,

ஆழ்ந்த தோல் நோய்கள் இவைகளில் நல்லது. அளவு : 1 - 4 ஸ்பூன்.

**வாஸாதிபானகம்** : காஸம், சுவாஸம், தொண்டைக்கட்டு, ஜ்வரம் இவைகளில் கபக்கட்டை இளக்கி இருமல் இழுப்பு வேதனையைக் குறைக்கும். இருமல், இழுப்பு வேதனைக்கேற்ப அடிக்கடி சாப்பிடத் தக்கது. அளவு : 1 - 4 ஸ்பூன்.

**ஸாரிவாபானகம்** : உடலில் ரத்தத்தில் சூடு மிகுதியால் ஏற்படும் சினப்பு கொப்புளம் அக்கி, கண்ணெரிவு தலை சுற்றுதல் முதலிய உபத்திரவங்களில் நல்லது. கோடை காலங்களில் தினமும் பகல் வேளைகளில் சாப்பிட நல்லது. அளவு : 2 - 4 ஸ்பூன்.

**ஸோமாதிபானகம்** : மார்பில் சளிகட்டி, இழுப்பு, சுவாஸத்திணறல், இருமல், ஆஸ்துமா நோய்களில் சிறந்தது அளவு : 1- 4 ஸ்பூன்.

## கிருதங்கள்

பொதுவாக இவை ஆகாரம் சாப்பிடுவதற்கு முன்பு, காலை மாலை இரண்டு வேளைகளிலும் வெறும் வயிற்றில் சாப்பிடத் தக்கவை. ஜீர்ண சக்திக்கேற்ப 1/2 - 2 ஸ்பூன் அளவு சாப்பிடத் தக்கது.

**இந்துகாந்த கிருதம்** : வாயுவால் ஏற்படும் குல்மம், உதரம், வயிற்றுவலி, முறைஜ்வரம் முதலியவைகளில் நல்லது. தீபனமும் பாசனமுமாகும்.

**கல்யாண கிருதம்** : உந்மாதம், அபஸ்மாரம், மூளைமந்தம், பேச்சுத்தடங்கல், ஞாபகமின்மை, அக்னி மந்தம் சுக்லக்ஷயம், ஸந்ததியின்மை, பாண்டு, அரிப்பு, விஷம், வீக்கம் தலைசுற்றுதல், பிரமேகம், இடுவிஷம். நாட்பட்ட ஜ்வரம் இவைகளில் நல்லது.

**குக்குலுதிக்த கிருதம்** : குஷ்டத்தின் எல்லா வகைகள். புரையோடிய புண், பகந்தரம், கண்டமாலை, கழுத்துக்கு மேற்பட்ட இடங்களில் வரும் வாதநோய், குல்மம், அர்சஸ், பிரமேஹம், ச்வாஸம் பீநஸம், காஸம், வீக்கம், ஹிருதய நோய், பாண்டு, மதாத்யயம் வித்திரதி, வாத ரக்தம் இவைகளில்

சிறந்தது. மிகவும் கடுமையான தோல் நோய்களில் இதன் உபயோகம் மிகவும் நல்ல குணமளிக்கவல்லது.

**ஜாத்யாதி கிருதம் :** நாட்பட்ட ஆறுத புண்களும் புரையோடியவையும் இதை வைத்துக்கட்ட ஆறும். பொதுவாக புண்கள் சீக்கிரம் ஆற இதன் உபயோகம் சாலச் சிறந்தது.

**தாத்ரீ கிருதம் :** பிரதரம், வெள்ளை, ரக்தக் குறைவு, காங்கை, பித்த குல்மம், ரக்த பித்தம், தலை சுற்றுதல், மயக்கம், உந்மாதம் முதலியவைகளில் பித்தத்தின் கோபத்தைக் குறைத்து பலம் அளிக்கவல்லது. மலட்டுத் தனத்தைப் போக்கும். அனுபானம், பால்.

**பல கிருதம் :** வீர்ய சக்திக் குறைவாலோ கர்ப்பாசயத்தின் புலக் குறைவாலோ கருத் தரிக்காதிருந்தால், தம்பதிகள் தொடர்ந்து சாப்பிடக் கர்ப்ப தாரணம் ஏற்படும், எல்லாவித கர்ப்பாசய தோஷங்களையும் மாதவிடாய் தோஷங்களையும் போக்கும். அனுபானம் பால்.

**மஹாதிக்தககிருதம் :** தோலைப் பற்றிய நோய்களில் பித்தத்தால் ஏற்படும் உபத்திரவங்களைச் சீக்கிரமாய் போக்கக் கூடியது. உள்ளுக்குச் சாப்பிடவும் மேலுபயோகத்திற்கும் மிகச்சிறந்தது.

**மஹாபஞ்சகவ்ய கிருதம் :** அபஸ்மாரம், உந்மாதம், உதரம், வீக்கம், குல்மம், மூலம், பாண்டு, காமலே, ஹலீமகம், நாலாம் நாள் வரும் முறை ஜ்வரம் இவைகளில் நல்லது.

**ஸுகுமார கிருதம் :** குடலிறக்கம், விரைவாதம், வித்ரதி, குல்மம், மூலம், கர்ப்பாசய நோய், வீக்கம், உதரம், மண்ணீரல் வீக்கம், மலக்கட்டு இவைகளில் சிறந்தது.

## தைலங்கள்

**அச்வகந்தாபலாலாக்ஷாதி தைலம் :** நாட்பட்ட ஜ்வரங்களில் ஜ்வரதாபம் லேசாகத் தொடர்ந்திருப்பதைக் குறைக்கவும், ஜ்வரம் விட்டபின் தலைக்கு ஜலம் விடுவதற்கும் ஏற்ற அப்யங்க தைலம். உடலில் காங்கை, வரட்சி, இளைப்பு, அடிக்கடி சளி ஜலதோஷம் முதலியவைகளால் பீடிக்கப்படுபவர்களுக்கு ஏற்றது.

**அணு தைலம்** : உடலில் சகிப்புத் தன்மையைப் பாதுகாக்கவல்லது. மூக்கிற்கும் மூக்கின் வழியே தலைக்கும் தலையிலுள்ள இந்த்ரியங்களுக்கும் பலம் அளித்து பீநஸம், தலைவலி, கண்வலி, மென்னிப்பிடிப்பு, நீரிளக்கம் முதலிய நோய்கள் பீடிக்காமல் தடுத்து உதவும் நஸ்ய தைலமாகும். காலையிலும் மாலையிலும் இதைத் தினசரி நஸ்யமிட்டுக் கொள்ள கண் முதலிய இந்த்ரியங்கள் குறையின்றி நன்கு இயங்கும்.

**அஸன பில்வாதி தைலம்** : தலை, கண், காது இவைகளை நோய்களிலிருந்தும் பாதுகாக்கும் அப்யங்க தைலம். பீநஸம், தலைவலி - கண் - மண்டை வலி, ஒற்றைத் தலைவலி காதுவலி, காதில் சீழ் வடிதல் முதலியவைகளால் அடிக்கடி பீடிக்கப்படுபவர்களுக்கு ஏற்றது.

**அஸன ஏலாதி தைலம்** : அஸன பில்வாதியை யொத்தது. பித்தவாகுள்ளவர்களுக்கு அதிகமாக நல்லது அரிப்பு, சினப்புகளைப் போக்கி தோலுக்கு மென்மையும் காந்தியுமளிக்க வல்லது.

**அஸன மஞ்சிஷ்டாதி தைலம்** : அஸன பில்வாதியை ஒத்தது. கெட்ட பீநஸத்தில் மிகவும் ஏற்றது.

**கர்ப்பூராதி தைலம்** : கபத்தாலும், வாயுவாலும், நரம்புகளிலும் தசைகளிலும் ஏற்படும் வலி, இறுக்கம், சீதளம் கொள்ளுதல், பிடிப்பு, வீக்கம் முதலியவைகளில் மேல் பூசி ஒத்தடம் கொடுக்க நல்லது.

**காகமாச்யாதி தைலம்** : இது உள்ளுக்குச் சாப்பிடத் தகுந்தது. சிற்றாமணக் கெண்ணெய்யில் தயாரானது. உள்காங்கை சொரி சிரங்கு, அக்கி, வாய்ப்புண், மலக்கட்டு இவைகளில் நல்லது. லகுவான பேதி எண்ணெய்யாகும்.

**சதுக்ஷீரிகேர தைலம்** : கடும் நோய்களிலிருந்து விடுபட்ட பின்னரும் ஆரோக்கியத்திற்காகவும் உபயோகிக்கத் தகுந்த சிறந்த அப்யங்க தைலம், நாட்பட்ட காங்கை, காஸம், ச்வாஸம், க்ஷயம், ரக்தபித்தம், பிரதரம், எரிச்சல், அரிப்பு கொப்புளம், தலைவலி, வீர்யநஷ்டம், வீக்கம், பாண்டு முதலிய நோய்களில் அப்பியங்கத்திற்கேற்றது. அயர்வை நீக்கி பலம், புஷ்டி காந்தி அளிக்கும்.

**சந்தனாதி தைலம்** : உடற்காங்கையைக் குறைத்து தோலுக்கு மென்மையையும் காந்தியையும் அளிக்கும். உடல் கட்டு குலையாமல் புஷ்டியடையச் செய்யும். நல்ல மூளை வேலையுள்ளவர்கள், படிப்பவர்களுக்கு தினமும் அப்பியங்கத்திற் கேற்றது.

**சூலகுடார தைலம்** : வாத நோய்களில் மல சோதனத்திற்காகச் சாப்பிடத் தகுந்த சிற்றாமணக் கெண்ணெய்யாகும். கீல் வாயு, விரை வாயு முதலியவைகளில் நல்லது. அளவு : 10 - 20 மிலி லிட்டர்.

**திரிபலாதி தைலம்** : நீர் கோர்வை, மண்டைச்சளி, தலைவலி, நரை, சொட்டை முதலியவைகளில் தினசரி அப்பியங்கத்திற்கேற்றது.

**தினேசவல்லி தைலம்** : தோலைப் பற்றிய நோய்களில் முக்கியமாக சொறி, அரிப்பு, படை, தேமல் முதலியவைகளில் மேல் பூச்சிற்கேற்றது.

**தூர்வாதி தைலம்** : உஷ்ணத்தாலும் பித்தத்தாலும் ஏற்படுகிற எரிச்சல், அரிப்பு படை சொறி முதலியவைகளில் ஏற்றது.

**நாராயண தைலம்** : வாத வியாதிகளில் உள்ளுக்குக் கொடுக்கவும், நஸ்யமிடவும், பஸ்தி செய்யவும், மேல் தேய்க்கவும் நல்லது. பக்ஷவாதம், தாவடைப்பிடிப்பு, மென்னிப்பிடிப்பு, தோள்வளைப்பிடிப்பு, குரக்கிளி, இடுப்புப் பிடிப்பு, விலாப் பிடிப்பு, காது வலி, தொடைவாயு, உடல் இளைத்தல் முகம் - தலைப்பிடிப்பு வாத வியாதிகளில் சிறந்த உபயோகமுள்ளது. ஸ்நேஹபானமாக 1-2 அவுன்ஸ் வரையிலும், வியாதிஹரமாக 15 - 60 சொட்டுகளும் தகுந்த வைத்யரின் மேற்பார்வையில் உள்ளுக்குச் சாப்பிடலாம்.

**நீலிபிருங்காதி தைலம்** : கேசங்கள் உதிர்தல், செம்பட்டையாகுதல், பொடுகு முதலிய கேச வியாதிகளில் மிகச்சிறந்த அப்யங்க தைலம். கேசங்கள் கருத்து அடர்த்தியாக வளர உதவும்.

**பஞ்ச குண தைலம் :** பூட்டுகளில் பிடிப்பு, வீக்கம், வலி, தலைவலி, காதுவலி இவைகளில் மேல் பூச்சிற்கு ஏற்றது. விரணங்கள் ஆற இதை வைத்துக் கட்டலாம்.

**பலாதிநிம்ப தைலம் : (மஹா நிம்பதைலம்) :** குழந்தைகளுக்கு ஏற்படும் மார்ச்சளி, தலைச்சளி, ஜ்வரம் கபக்கட்டு, வாயுக்கட்டு இவைகளில் உள்ளுக்குக் கொடுக்கவும் மேலுக்குத் தேய்க்கவும் ஏற்ற வேப்பெண்ணெய், இதை உள்ளுக்கு சுக்கு கஷாயம் அல்லது ஏற்ற அனுபானத்துடன் 1/2 - 1 ஸ்பூன் கொடுக்க, கபம் இளகி வெளியாகி கபவாயுக்கட்டால் ஏற்படும் இழுப்பு, இருமல் முதலியவை குறையும். மார்பகத்தின் மேல் தடவி தவிடு முதலியவைகளால் ஒத்தடம் கொடுக்கலாம். மூக்கடைப்பும் தலைவலியும் மிகுந்துள்ள நிலையில் 1-2 சொட்டு நஸ்யமிடுதலும் நல்லது.

**பாமாரி தைலம் :** சொரி, சிரங்கு, படை முதலியவைகளில் மேலுக்கு பூச ஏற்றது. அரிப்பை உடன் குறைக்க வல்லது.

**பிண்ட தைலம் :** வாத ரக்தத்தில் ரத்தக் கட்டைக் குறைத்து வலியையும் எரிச்சலையும் குறைக்கும். பித்த ரத்தகோபத்துடன் ஏற்படும் வாத நோய்களுக்கு மிகவும் ஏற்றது.

**பிருங்காமலக தைலம் :** தினசரி ஸ்னானத்திற்கு முன் தலைக்கும் உடலுக்கும் பூசிக் கொள்ள ஏற்றது. உடல் காங்கை, எரிச்சல் இளைப்பு, வரட்சி, புலன்களின் பலவீனம் இவைகளைப் போக்கி உடலுக்குச் சுறுசுறுப்பையளிக்கும். அகால நரையைப் போக்கும்.

**மதயந்த்யாதி தைலம் :** மயிர்க்கால்களின் பலவீனத்தாலும் உட்காங்கையாலும் ஏற்படும் கேசங்கள் உதிர்தலைத் தவிர்த்து கேசங்கள் அடர்த்தியாக வளர உதவும். பொடுகு, மயிர்க்காய் முதலிய கேசரோகங்களைப் போக்கும்.

**மஹாதான்வந்தர தைலம் :** எல்லா வாத வியாதிகளிலும் மேல் பூசவும் உள்ளுக்குச் சாப்பிடவும் நஸ்யமிடவும் பஸ்தி கொடுக்கவும், மிகவும் ஏற்றது. ஸ்நேஹ பானமாக 1-2 அவுன்ஸ் வரையிலும் வியாதிஹரமாக 15 - 60 சொட்டுகளும் தகுந்த வைத்தியர் மேற்பார்வையில் உள்ளுக்குச் சாப்பிடலாம்.

**மஹாபலா தைலம்** : வாதரக்தம், ஸர்வாங்க வாதம், பக்ஷவாதம் முதலியவைகளிலும் பூட்டுகளில் வலி, தசைகளில் வலி, நரம்புகளில் வலி முதலியவைகளிலும் மேல் பூசவும் உள்ளுக்குச் சாப்பிடவும் நஸ்யமிடவும் நல்லது. ஸ்னேஹ பானமாக 1- 2 அவுன்ஸ் வரையிலும் வியாதிஹரமாக 15 - 60 சொட்டுகள் வரையிலும் தகுந்த வைத்தியர்களின் மேற்பார்வையில் உள்ளுக்குச் சாப்பிடலாம்.

**மஹாநாராயண தைலம்** : நாராயண தைலத்தை விட குணத்தில் சிறந்தது. வாத வியாதிகளில் உள்ளுக்குக் கொடுக்கவும். நஸ்யமிடவும், மேல் தேய்க்கவும் நல்லது. பக்ஷவாதம் தாவடைப் பிடிப்பு, மென்னிப் பிடிப்பு, தோள்வளைப் பிடிப்பு, குரக்கிளி, இடுப்புப் பிடிப்பு, விலாப் பிடிப்பு, காதுவலி, தொடை வாயு முதலிய நோய்களில் மேலுக்குத் தேய்க்கலாம். நாராயண தைலம் போல் உள்ளுக்கும் கொடுக்கலாம்.

**மஹாமாஷ தைலம்** : வாத நோய்களில் முக்கியமாக தசைகளிலும் நரம்புகளிலும் வரட்சி மிகுந்து காய்ந்து இயக்கம் குன்றும் நிலையில் இதன் உபயோகம் மிகவும் நல்லது. கை கால் ஆட்டம், கழுத்து நரம்பு - தசைகளின் பலவீனத்தால் ஏற்படும தலை ஆட்டம் முதலியவைகளில் நரம்புகளுக்குப் பலமூட்டித் தசைகளில் ரத்த ஓட்டத்தையும் உணர்ச்சியையும் அதிகரிக்கச் செய்யும்.

**மஹாருத்ரகுடுசீ தைலம்** : கடுகெண்ணெய்யில் தயாரான மேலுபயோகத்திற்கேற்ற தைலம். வாத ரக்தம் குஷ்டம், கபவாதப் பிரதானமான விஸர்ப்பம், விரணம் இவைகளில் மிகவும் நல்லது. தோலின் வரட்சியையும் அரிப்பையும் போக்கும், புண்ணையாற்றும், ரக்த ஓட்டத்தை அதிகப்படுத்தும், வீக்கம் வலி கசிவு இவைகளைப் போக்கும்.

**லாக்ஷாதி தைலம்** : குழந்தைகளுக்கும் பெரியோர்களுக்கும் ஏற்ற அப்பியங்கத் தைலம், நோய்களிலிருந்து விடுபட்டதும், தலைக்கு ஜலம்விட மிகச் சிறந்தது. உட்காங்கை, தோல் வரட்சி, எரிச்சல், உற்சாகமின்மை, அசதி இவைகளைப் போக்கும். பலத்தைத் தரும்.

**ஸஹசராதி தைலம்** : கம்பவாதம், உதறுதல், திமிர்த்திருத்தல் வரண்டு சுருங்கி விடுதல் முதலிய உபத்திரவங்களுள்ள எல்லா வாத நோய்களிலும் மேலுக்குப் பூச மிகவும் நல்லது. குல்மம், உந்மாதம், பீநஸம், கர்ப்பாசய நோய்கள் முதலியவைகளிலும் ஏற்றது.

**ஸிந்துவார தைலம்** : அடிக்கடி மார்ச்சளி, பீநஸம், தலைவலி, ஜலதோஷம் முதலிய நோய்களைப் போக்கி ஆரோக்கியத்தை அளிக்கும்.

**ஹேமப்பிரபா தைலம்** : சிறந்த ஸ்நான தைலம். உட்காங்கை பிரமை, கண், தெளிவின்மை, ஞாபக சக்திக்குறைவு முதலியவைகளில் மிகவும் ஏற்றது.

**ஸுகுமார தைலம்** : சிசுக்களுக்கும் சிறுவர்களுக்கும் ஏற்ற ஸ்நான தைலம். உட்காங்கை, தோல்வரட்சி, எரிச்சல், உற்சாகமின்மை, அடிக்கடி ஜலதோஷம், ஜ்வரம், மார்ச்சளி பிடித்தல் இவைகளில் நோய் வராமல் பாதுகாக்க மிகச் சிறந்தது. பலம் புஷ்டி தரக்கூடியது.

**ஸுகந்திவிரஞரி தைலம்** : அரிப்பு, சொரி, சிரங்கு ; தடிப்பு அக்கி முதலியவைகளில் மேல் பூச்சிற்கேற்றது.

**ஹிங்குத்ரிகுண தைலம்** : குடல் வாயு, அண்டவாயு, குன்மம், உதரம் மற்றும் வாதப் ப்ரதானமான நோய்களில் உள்ளுக்குச் சாப்பிட ஏற்றது. காலையிலும் இரவு படுக்கும் போதும் 1 - 2 ஸ்பூன் அளவு சாப்பிடலாம். காதில் விட காது வலியைக் குறைக்கும்.

**க்ஷீரபலா தைலம்** : மஹாபலா தைலத்தை ஒத்தது.

**க்ஷீரபலாதைலம் ஆவர்த்திதம்** : உள்ளுக்குச் சாப்பிடுவதற்கென மஹாபலா தைலத்தையே குறிப்பிட்ட தடவைகள் (7,21, 101) ஆவர்த்தி செய்யப்பட்டுள்ளது 101. தடவை பாகமடைந்தது மிகவும் சக்தி வாய்ந்தது. 10 - 15 சொட்டுகள் அளவில் வைத்யரின் மேற்பார்வையில் ஜீரக கஷாயம், ஜடாமாஞ்சி கஷாயம் தசமூல கஷாயம். தான்வந்தர கஷாயம், தகராதி கஷாயம், தேவதார்வாதி கஷாயம், மஹாராஸ்னாதி கஷாயம், தேவதார்வாதி கஷாயம், மஹாராஸ்னாதி கஷாயம்,

சோம்பு கஷாயம், பசுவின் பால் இவைகளில் ஒன்றுடன் உள்ளுக்குச் சாப்பிடலாம். தசை, நரம்பு, பூட்டுக்ள், அஸ்தி மஜ்ஜை முதலிய இடங்களில் வலி, வீக்கம், வரட்சி, காய்ந்து சுருங்குதல், உணர்வின்மை முதலிய உபத்ரவங்களுடன் கூடி ஏற்படும் பக்ஷவாதம், ரக்தவாதம், முக பக்ஷவாதம், ரகதக் கொதிப்பு முதலிய வாத நோய்களில் ஏற்றது. கடுமையான வலி உள்ள இடங்களிலும் உணர்வற்றிருக்குமிடங்களிலும் மேல் பூச்சிற்கும் ஏற்றது.

## லேஹ்யங்கள்

பொதுவாக இவை *1- 3* கொட்டைப்பாக்களவு (சுமார் *5 - 20* கிராம்) அளவு ஜீர்ண சக்தியை ஒட்டி சாப்பிடக் கூடியவை. காலை மாலை இரு வேளைகளிலும் வெறும் வயிற்றில் உணவிற்கு முன் சாப்பிடுவது நல்லது. ஜீர்ண சக்திக்கான லேகியங்களை ஆகாரத்திற்குப் பின்னும் சாப்பிடலாம்.

**அகஸ்திய ரசாயனம்** : இருமல், சளி, இழுப்பு, விக்கல், ஹிருதயவலி முதலிய மார்பக நோய்களில் மிகவும் சிறந்தது. மற்றும் நாட்பட்ட முறை ஜ்வரம், மூலம், கிரஹணி. அரோசகம் முதலியவைகளில் நல்ல உதவியளிக்கக் கூடியது.

**அச்வகந்தாரஸாயனம்** : பலம் புஷ்டி தரும். சிறந்த ரஸாயனம், இளைப்பு, பலக்குறைவு, பிரமேஹங்கள், உடல் எரிச்சல், தலை சுற்றுதல், தாது நஷ்டம், நரம்புத் தளர்ச்சி அசதி இவைகளைப் போக்கும்.

**கண்டார்த்ரக ரஸாயனம்** : பிரஸவித்த மாதர் சாப்பிடக் கூடிய சிறந்த ஜீர்ணகாரி லேகியம், நல்ல பசி ஜீர்ணசக்தி அளித்து உடலைப் புஷ்டியடைச் செய்யும். கிரஹணீ, அம்லபித்தம், காஸம், ச்வாஸம், பீநஸம் முதலியவைகளில் மிகச்சிறந்தது.

**குங்குமாதி லேஹியம்** : அம்லபித்தம், தலைசுற்றுதல் மயக்கம், அருசி வாந்தி ரத்தமூலம், பிரமேஹம், எரிச்சல், உடல் இளைப்பு, மார்பு, தொண்டை, எரிச்சல் நாவரட்சி அதிஸாரம் முதலிய பித்தம் கெடுவதால் ஏற்படும் நோய்களில் மிக நல்லது. கெட்ட பித்தத்தைச் சீராக்கி தீபன சக்தியை நேராக்கி புஷ்டியளிக்க வல்லது.

**க்ஷுஷ்மாண்ட ரஸாயனம்** : மார்பகத்தில் ஏற்படும் வேக்காளத்தையும் புண்ணையும் ஆற்றி மார்பகத்திற்குப் பலத்தை அளிப்பதில் சிறந்தது. மார்பக வேக்காளத்தால் ஏற்படும் ரக்தபித்தம், உரக்ஷதம், க்ஷயம், காஸம், ச்வாஸம், வாந்தி, நாவரட்சி, ஜ்வரம், தொண்டைக்கம்மல் இவைகளைப் போக்கும், புஷ்டி, பலம் தொண்டைக்கு இனிமை இவைகளை அளிக்க வல்லது.

**சதாவரீகுடம்** : மூலாதாரக் கொதிப்பை அகற்றி மூத்திராசயம், சுக்கிலாசயம், கர்பபாசயம் இவைகளுக்குப் பலமும் தெளிவும் அளிக்கக் கூடியது. சுக்கிர க்ஷயம் அச்மரீ ப்ரமேஹம், எரிச்சல், தலைச்சுற்றுதல், நாவரட்சி முதலியவைகளிலும் பொதுவாக பித்த நோய்களிலும் நல்லது.

**சந்திரிகாவலேஹம்** : - அதிகக்கவலை, அதிக புத்தி வேலை முதலியவைகளில் ஏற்படும் தூக்கமின்மை, அசதி, தலையில், எரிச்சல், வலி, தலை சுற்றுதல், ரக்தக்கொதிப்பு, மூளைக் கொதிப்பு இவைகளைப் போக்கும். மூளைக்குத் தெளிவைத் தரும்.

**சியவனப்ராசம்** : சிறந்த ரஸாயன லேஹியம், தினசரி பாலர் யுவர் வயதானவர் உபயோகிக்க ஏற்றது. ரஸாயனமாக உபயோகிப்பதால், பலம், புஷ்டி, ஞாபகசக்தி, மேதை, தாதுபுஷ்டி இவைகளை அளிக்க வல்லது. காஸம், ச்வாஸம், தொண்டைக்கம்மல், ஹிருதய பலவீனம் முதலிய மார்பக நோய்களில் ஏற்ற ரஸாயனம்.

**ஜீரக வில்வாதி லேஹியம்** : உணவு ஜீர்ணமாவதில் தாமதத்தைப் போக்கி நன்கு ஜீர்ணமடையச் செய்யும். பித்தவாயு உபத்ரவத்தைப் போக்கி அருசி, உமட்டல், அசதி, பெருமூச்சு முதலியவைகளைப் போக்கும்.

**நாரங்கபில்வாதி லேஹியம்** : அஜீர்ணத்தில் எல்லா நிலைகளிலும் நல்லது. அஜீர்ணத்தால் ஏற்படும். கிரஹணி, மலக்கட்டு, வயிற்றுவலி, சோகை, வாய்க்கசப்பு முதலிய உபத்ரவங்களைப் போக்க வல்லது. நல்ல பசி ஜீர்ணசக்தி ருசி அளிக்க வல்லது.

